பதினெட்டாம் புள்ளி கறுப்பு (கிருஷ்ண புத்ராள்): ஜால வித்யாப்ரதம், சத்ரு சேஷ்டா நிவாரணம்.

மாடன் (அக்நியாஸுரன்): அக்னி ஜாலவித்யா ப்ரதம்.

காருடம்: ஸர்ப்பவிஷநாசம்.

தத்தாத்ரேயம்: ஞான வைராக்ய கைவல்ய ப்ரதம்.

காளிகா மந்த்ரங்கள்: சத்ருபாதா நிவாரணம், ஜயப்ரதம்.

ப்ரத்யங்கிரா: பரப்ரேரித மந்த்ர யந்த்ர பாதா நிவாரணம்; பூதப்ரேத சேஷ்டா விநாசனம்.

உக்ரக்ருத்யா அதர்வண ப்ரத்யங்கிரா: சத்ரு ஸம்ஹாரம்.

தக்ஷிண காளிகா: ஸர்வஸித்திப்ரதம்.

சண்டிகா நவாக்ஷரீ: ஸகலாரிஷ்ட நிவாரணம்; ஜயப்ரதம்.

மங்கள சண்டிகா: புத்ரப்ரதம், (ஸ்திரீ களுக்கு) ஸௌபாக்யப்ரதம், அங்காரக தோஷ நிவாரணம்.

ரக்தசாமுண்டி: ஆகர்ஷணம், ஷட்கர்ம ப்ரயோக ஸாதனம்.

வ்யாக்ர சாமுண்டி: சத்ரு சேஷ்டா நிவாரணம்.

உக்ர சாமுண்டி, வீர சாமுண்டி: சத்ரு நிவாரணம்.

ருத்ர சாமுண்டி: ஸகல பாதா நிவாரணம்.

ஜயதுர்க்கா: துக்க நிவாரணம், ராகு க்ரஹ தோஷ நிவாரணம்.

தீபதுர்க்கா: த்ரிகால ஞானப்ரதம்.

பக்ஷி துர்க்கா: சத்ரு நிவாரணம்.

ஆசூரீ துர்க்கா: சத்ரு ஸம்ஹாரம்.

சூலிநீ துர்க்கா மஹிஷ மர்த்தினி: கர்ம விபாவம், ஸகல தோஷ நிவாரணம், ஷட் கர்ம ஸாதனம். சுக்ரக்ரஹ தோஷ நிவாரணம்.

வனதுர்க்கா: வாஞ்சிதார்த்த பலப்ரதம்.

இந்த்ராக்ஷி: பூதப்ரேத பிசாச நிவாரணம், ஜ்வரஹரம்.

ரேணுகா: பாலாரிஷ்ட நிவாரணம்.

சீதலா: வசூரி பாதா சமனம்.

மஹாலக்ஷ்மீ: ஐஸ்வர்ய ப்ரதம்.

குபேரம்: ஐஸ்வர்ய ப்ராப்தி.

இந்த்ராணி: ஸுப்ரஹ்மண்ய ஜபஸித்தி.

பகளாமுகி: சத்ருஸ்தம்பனம்.

மஹாவாராஹி: ஸகல கார்ய ஸித்தி, சத்ரு சேஷ்டா நிவாரணம், பலப்ரதம், ஸ்ரீ வித்யாங்க தெய்வம்.

ஸ்வப்ன வாராஹி: சத்ரு சேஷ்டா நிவாரணம் த்ரிகால ஞானம்.

தூம்ர வாராஹி: சத்ரு நிக்ரஹம்.

ப்ருஹத் வாராஹி: சத்ரு சேஷ்டா பந்தனம்.

அஸ்த்ர வாராஹி: சத்ரு ஸம்ஹாரம்.

புளிந்தினீ: த்ரிகால ஞானம், வாக்ஸித்தி.

ராஜச்யாமளா: கீர்த்தி, யசஸ், ஸௌபாக்ய ப்ரதம், ஸ்ரீ வித்யாங்க தெய்வம்.

ஸ்வயம்வரா பார்வதி: ஸத்பதிப்ரதம் (ஸ்த்ரீ களுக்கு)

கந்தர்வ மந்த்ரம்: சீக்ரவிவாஹ ப்ராப்தி

மன்மதன்: ஸ்த்ரீ வச்யம், லோக ஸம்மோஹனம், ஷட்கர்ம ஸித்தி.

ரதிதேவீ: புருஷ வச்யம், மங்களப்ரதாயகம்.

சாரதா மந்த்ரங்கள்: வித்யாப்ரதம்.

ஸரஸ்வதி, நீல ஸரஸ்வதி: ஸகல கலாக்ஞான ப்ராப்தி.

ஸங்கீத ச்யாமளா: ஸங்கீத க்ஞான ப்ராப்தி.

பாலா த்ரிபுரஸுந்தரி: நவஸித்திப்ரதம், ஸ்ரீ வித்யா மந்த்ரம்.

புவனேஶ்வரீ: ஸகல ஸௌபாக்ய ப்ரதம், ஸ்ரீ வித்யா மந்த்ரம்.

பஞ்சதசாக்ஷரீ மஹாத்ரிபுரஸுந்தரீ (லலிதா, ராஜராஜேஸ்வரீ) ஸ்ரீ வித்யா தெய்வம்; தெய்வதம், தர்மார்த்த காம, மோக்ஷ ப்ரதம், ஸ்ரீ சக்ர மேருபூஜை.

மஹா அல்லது பரா ஷோடசாக்ஷரீ மஹா த்ரிபுரஸுந்தரீ: ஸ்ரீ வித்யா பூர்த்திகரம், ஸர்வஸித்தி ப்ரதம்.

பராசாம்பவி மந்த்ரம், ப்ராஸாத மந்த்ரம், பராப்ராஸாத மந்த்ரம்: ஸ்ரீ வித்யா, க்ஞான மோக்ஷ ப்ரதம்.

சக்தி பஞ்சாக்ஷரம்: பஞ்சபாதக நாசனம்.

வாசி பஞ்சாக்ஷரம், சூக்ஷ்ம பஞ்சாக்ஷரம்: ஞான கைவல்ய தாயகம்

ஸோமாஸ்கந்தம், ஸந்தான பரமேச்வரம்: புத்ரப்ரதம், பாப நிவாரணம்.

சிதம்பர பஞ்சாக்ஷரம்: யோகஸாதனம், மோக்ஷ ப்ரதம், சந்த்ர க்ரஹ தோஷ நிவாரணம்.

அகோர வீரபத்ரம்: சத்ரு நிவாரணம்.

சரபம், சரப சூலிநீ ஸர்வ சாந்தி ஜபம்: ப்ரஹ்ம ராக்ஷஸ முனீச்வர சேஷ்டா நிவாரணம், கர்ம விபாவம், மஹாபாதக நிவாரணம்.

நீலகண்டம்: விஷவ்யாதி நிவாரணம்.

தக்ஷிணாமூர்த்தி: ஞான ப்ரதம், மோக்ஷ கைவல்யம், குருக்ரஹ தோஷ நிவாரணம்.

லக்ஷ்மி தக்ஷிணாமூர்த்தி: ஐச்வர்ய ப்ரதம், ஞான விருத்தி ப்ரதம்.

மேதா தக்ஷிணாமூர்த்தி: மேதாபி விருத்தி.

வீர தக்ஷிணாமூர்த்தி: துஷ்டக்ரஹ தோஷ அபஸ்மார நிவாரணம்.

கான தக்ஷிணாமூர்த்தி: ஸங்கீத மேதா ப்ரதம்.

ஞான தக்ஷிணாமூர்த்தி: வைராக்யம், ஆத்மக் ஞானம்.

அம்ருத ம்ருத்யுஞ்சயம்: ஆயுள் விருத்தி; அகாலமருத்யு நிவாரணம்

ம்ருதஸஞ்ஜீவிநீ மந்த்ரம்: ஸகல ரோக நிவர்த்தி, அபம்ருத்யு பயஹரம்

பலாதி பலா மந்த்ரம்: காயத்ரி உபமந்த்ரம், க்ஷுத்பாதா நிவாரணம்

சூக்ஷ்ம அல்லது ப்ரணவ காயத்ரி மந்த்ரம்: ஆசமன, ப்ராணயாம, அர்க்ய, ஜபம் ஆகிய நான்கு அங்கங்கள் கொண்டது. காயத்ரி ஜபஸித்தியைக் கொடுப்பது.

ம்ருத்யலாங்குல மந்த்ரம்: "ஏகவாரம் ஜப்த்வா அஷ்டோத்தரசத ஸஹஸ்ர, லக்ஷகாயத்ரீ ஜப பலாநி பவந்தி" என்ற பலஸ்ருதிப்படி காயத்ரி மந்த்ரஸித்தி கொடுக்கவல்லது.

உத்கீலந மஹா மந்த்ரம்: காயத்ரியாதி ஸகல மந்த்ர சாப விமோசனம்.

த்வநி வித்யா: நாதாநு ஸந்தானம், யோக ஸாதனம்.

மஹாவாக்யம்: ஆத்மக்ஞானம்.

தவிர பகளாமுகி (ப்ரும்மாஸ்த்ரம்) நாராயணாஸ்த்ரம், பாசுபதாஸ்த்ரம். முதலியவைகள் ப்ரயோகரீதியில் அமைந்தவை தவிர மஹா மந்த்ரங்களுக்குத் தனி காயத்ரீ, ஹ்ருதயம், மாலாமந்த்ரம். கவசம், ஸ்தோத்ரம் போன்ற அங்கங்கள் உண்டு. அவைகளையும் சேர்த்து மந்த்ரங்களை ஜபம் செய்வது விசேஷம்.

பூஜைகளுக்கு விக்ரஹங்களைக் காட்டிலும் யந்த்ரங்கள் விசேஷம். யந்த்ரங்கள் ஸர்வ லக்ஷணங்களும் கூடியவை. யந்த்ரத்தில் தேவதா பீஜங்கள், ஆவரண தேவதைகள், ப்ராணப்ரதிஷ்டை, ஜிஹ்வா, நேத்ரம், ஸ்ரோத்ரம், பஞ்ச பூதங்கள். அஷ்டதிக்பாலர்கள், மந்த்ர, யந்த்ர, தேவதா காயத்ரிகள் அமைந்திருக்க வேண்டும். விஷம ரேகைகள் இருக்கக் கூடாது. பூஜை ஆரம்பிக்குமுன் ஸங்கல்பம் செய்துகொண்டு கலச பூஜை, சங்க பூஜை, ஆத்ம பூஜை, த்வார பூஜை, பீட பூஜைகள் செய்து கொண்டு பிறகு தேவதைகளுக்கு ப்ராணப்ரதிஷ்டை செய்யவேண்டும். பஞ்சோபசார அல்லது ஷோடசோபசார பூஜைகள் செய்ய வேண்டும். தேவிகளுக்கு சதுஷ்ஷஷ்டி உபசாரம் விசேஷம். பரமேச்வரன் அபிஷேகத்தாலும், வைகுந்த நாதன் ஸ்தோத்ர, நாம ஸங்கீர்த்தனத்தாலும், தேவி அலங்கார, உபசாரங்களாலும் முத்ரைகள் காண்பிப்பதாலும் சந்தோஷமடைகிறார்கள். காயத்ரிக்கு 24 முத்ரைகள்; பாலைக்கு அஷ்ட முத்ரைகள், இதர ஸ்த்ரீ தேவதைகளுக்கு பஞ்ச முத்ரை ப்ரீதியானது. மந்த்ரங்களை அக்ஷரலக்ஷம் என சங்கையைக் கருத்தில் வைப்பது முறையல்ல. "அக்ஷர லக்ஷ்யம்" என்றபடி மந்த்ரங்களை லக்ஷ்யத்தோடு மனனம் செய்யவேண்டும்.

பஞ்சாயதன பூஜையில் ஆதித்யம், அம்பிகை, விஷ்ணு, கணநாதம், மாஹேச்வரம்

ராவண்ணம் திக்பந்தனம் செய்துகொண்டு பின் த்யானத்தால் அந்த தேவதையைத் தன் மனதில் வரவழைத்து பஞ்ச பௌதிக தத்வங்களால் (லம் ப்ருத்வி தத்வாத்மனே போன்றவைகள்) உபசாரம் (பூஜை) செய்து பிறகு ஜபம் செய்ய வேண்டும். ஸ்த்ரீ தேவதைகளுக்கு முத்ரைகள் மிக்க ஸந்துஷ்டியைத் தரக் கூடியவை.

9. ஸாதகர்கள் அவசியம் அறிந்து அனுஷ்டானத்தில் கொண்டுவர வேண்டியது குரு தத்வம். குருவே தேவதா ஸ்வரூபம் சத்குருவால் அனுக்ரஹிக்கப்பட்ட பூஜா விதி, ஜபங்கள் சரியா, இல்லையா? என்பதை மற்றும் பலரைக் கேட்டு ஸந்தேஹத்தைக்கொண்டு சஞ்சலமடைவது மஹா பாபமாகும் தன் குருவால் உபதேசிக்கப்பட்டது சரியானாலும் தவறுதலானாலும் ஸத்யமான தென்று நிச்சய புத்தியுடன் ஏற்கவேண்டும். "க்ருஷ்ணாய நம:" என்பதைத் தவறி "த்ருஷ்ணாய நம:" என்று சொல்லியும், குரு வாக்காகக்கொண்ட ஓர் விப்ரன் க்ருஷ்ணானுக்ரஹம் பெற்றதையும் ஓர் அந்தணனைக் குருவாக வரித்த ஓர் பஞ்சமன் அவர் அவனைத் தன் அருகில் வராவண்ணம் மிரட்ட "ட்ரும்" என்று கூற அதையே குரு உபதேசமாக ஏற்று ஜபம் செய்து மேற்படி பஞ்சமன் வராஹ மூர்த்தியின் பூர்ணானுக்ரஹம் பெற்றதையும், ஸதா சலனமுள்ள ஸூரியனிடம் யாக்ஞவல்க்யர் வேதாத்யயனம் அவஸரத்தில் வேறுபட்ட வார்த்தைகளுடன் கற்றும் சூர்யானுக்ரஹம் பெற்றதால் "சுக்ல யாஜுஷம்" என்ற சிறந்த பெயர் வஹிக்கிறார் என்பதையும் நாம் கர்ண பரம்பரைக் கதைகளாகக் கேட்கிறோம்.

எவ்விதம் ஓர் ஸ்த்ரீயானவள் தன்கணவனைத் தவிர அன்னிய புருஷனை மனதாலும் நினைக்காமல் பதிவ்ரதா தர்மத்தைக் காப்பாற்றுகிறாளோ அவ்விதம் உத்தம சிஷ்யன் தன் ஸத்குருவைத் தவிர மற்றவர்களிடம் யாதொரு மந்த்ரமோ உபதேசமோ பெறக்கூடாது. பதிவ்ரதா தர்மமற்ற ஸ்த்ரீ சண்டாளி அல்லது பதிதை ஆகிறாள். அதுபோல் ஸ்வகுருவைத் தவிர மற்றவர்களிடம் உபதேசம் பெறுவதால் ஸாதகன் பதிதனாகிறான் என்று நூல்கள் கூறுகின்றன.

ஸாதகன் ப்ரதிதினம் காலையில் எழுந்ததும் குருவை த்யானிக்க வேண்டும். விசேஷ புண்ய காலங்களில் (மாஸ ஸங்க்ரமணம் போன்றவைகள்) ஸத்குருவைத் தரிசித்து, பூஜித்து (மரியாதை செய்து, கந்த, புஷ்ப பலாதிகளால் உபசரித்து அனுக்ரஹம் பெற வேண்டும் பூஜா, ஜபங்கள் செய்யமுடியாத காலத்தில் ம்ருகி முத்ரை போட்டு குருபாதுகா மந்த்ரத்தை மட்டுமாவது ஜபம் செய்ய வேண்டும் குருபாதுகையைப் பூஜிப்பதால் ஸகல தேவதானுக்ரஹம் ஏற்படும்.

குரு தத்வம் மஹத்தானது. கீழ்க்கண்ட த்யான ஸ்லோகம் ஸத்குருவின் உயர்நிலையை விளக்குகிறது.

"க்ஷமாக்ஷமஸ்தம் க்ஷமநாதி ஶூன்யம்
சித்₃ரூபமேகம், பரமாத்மஹாஸம்
ஊர்த்₄வாம்நாய குருத்ரிபு₄வன-
மயோங்கார ஸிம்ஹாஸனம்

ஸித்₃த₄ாசார ஸமஸ்த தே₃வ மத₃னம்
ஷட்சக்ர ஸஞ்சாரிணம்
ஜீவாத்மைக்யமக₂ண்ட₃ ஜ்யோதிரமலம்
பூர்ணப்ரப₄ா ஶோபி₄தம்
ஶாந்தம் ஸத்கு₃ரு பாது₃காம் ப₄ஜநம
ச்சைதன்ய சந்த்₃ரோத₃யம்"

இந்த குரு தத்வம் உபாஸகர்களுக்கும், யோகிகளுக்கும், ஞானிகளுக்கும் பொது வானது.

ஆதலால் ஆஸ்திகர்கள் அனைவரும் மந்த்ர அனுஷ்டானத்தை விதிப்படி ஸத்குருவினிடமிருந்து அனுக்ரஹ பூர்வமாய் உபதேசம் பெற்று ஸாதனம் செய்தால் பூர்வ வினையின் உபாதையிலிருந்து ஒரு அளவு விடுபட்டு துக்கம் நீங்கி இன்ப வாழ்வையும் இகபர ஸாதனத்தையும் இறுதியில் பேரின்பத்தையும் அடைவார்கள் என்பது ஆன்றோர் வாக்கு.

"ஸ்ரீ ஸத்குரு சரணாரவிந்தாப்யாம் நம:"

சுபமஸ்து.



# நவக்ரஹங்கள் - பிரஹஸ்பதி

(அனுபவ ஸித்தாந்தம்)

நவக்ரஹங்களில் சூரியனை அடுத்து மஹா பெரியது குரு மண்டலம். இம்மண்டலம் பூமியைவிட பத்து மடங்குக்குமேல் பெரியது. சூரியனிடமிருந்து பூமியைக் காட்டிலும் ஐந்து மடங்கு அதிகம் துலைவிலிருப்பதால் ஸதா குளிர்ச்சி பொருந்தியதாயிருக்கவேண்டுமென்று வான சாஸ்த்ர ஆராய்ச்சியாளர் ஊகிக்கிறார்கள்.

குரு பகவான் மிகவும் சாத்வீக குணமும் தன் ஆதிக்யம் உள்ளவர்களுக்கு மிகுந்த நன்மை தரும் இயல்புமுள்ளவர். இக்கிரஹத்திற்கு தனுசு, மீனம் ஆதிக்யமான இடம், கடகம் உச்சவீடு, மகரம் நீசஸ்தானம். இவர் ரிஷப, மிதுன, கன்னி, துலா, மகர லக்னக்காரர்களுக்கு பொதுவில் நல்ல பலனைக் கொடுக்க மாட்டார். அதிலும் ரிஷப, துலா ராசிக்காரர்களுக்கு பிரதிகூல பலனையே அளிப்பார். இவர் புத்ரகாரகர். உயர்ந்த அந்தஸ்து, சிறந்த மேதை, ஆத்மஞானம், ஸத்கர்ம ஈடுபாடு முதலியவைகள் அளிப்பவர். இக்கிரஹத்திற்கு சூரியன், சந்த்ரன், செவ்வாய், சனி போன்றவர்கள் ஸ்வபாவ மித்ரர்கள். புதன், சுக்ரன் வைரிகள். இவர் தேவகுரு வானதாலும் சுக்ரன் அஸுரகுரு வானதாலும் இவர்களுக்குள் பகைமை அதிகம். குருபகவான் தான் இருக்கும் ராசியிலிருந்து 5, 7, 9 ராசிகளை பார்ப்பார். குரு பார்வை விசேஷமானது. ஆதலால் ''குரு பார்த்தால் கோடி பாவம் (தோஷம்) போகும்'' என்று ஸாதாரணமாகச் சொல்லுவதுண்டு

குரு பகவான் வெளுப்பும் மஞ்சளும் கலந்த பொன் நிறத்தை உடையவர். பொதுவாக குரு பிரதிகூலமான இடத்தில் இருப்பதால் ஸ்வாஸ காசம், ரக்தக்குழல் வியாதி, சர்ம ரோகம் முதலிய உபாதிகளும், இடுப்பு, கீழ் குடல் முதலிய இடங்களில் வியாதியையும் உண்டாக்குவார். குருவால் ஸ்வாஸ காசம், ரக்தக் கோளாறு, ஈரல் வியாதி, ஹ்ருதய நோய், இழுப்பு, வாத ரோகங்கள் போன்ற உபாதிகள் சிலருக்கு உண்டாக ஹேது உண்டு.

## குரு த்வாதச பாவங்களில் ஜனன காலத்தில் இருப்பின் பொது பலன்கள்

1. லக்னம்: லக்னத்தில் குரு இருந்தால் ஸாமுத்ரிகா லக்ஷணம் அமைந்த சரீரம், நல்ல வித்தை, அறிவு, மதப்பற்று, நன்னடத்தை, கௌரவம், அந்தஸ்து இவைகள் ஏற்படும்.

ஆனுல் துஷ்ட க்ரஹங்கள், அல்லது சுக்ரன் சேர்க்கை, அல்லது திருஷ்டி, சரீர பீடையை யும், களத்ர சுகமில்லாமையையும், கொடுக் கும்.

2. த்விதீயஸ்தாநம்: பாபிகள் சேர்க் கை இல்லாமலிருந்தால் சிறந்த வித்தை, தன தான்ய ஸம்பத்து, குடும்ப ஸுகம், வாக் விலாஸம், இவைகளைக் கொடுப்பார்.

3. திரிதீயஸ்தாநம்: ஸந்ததிகளிடம் பற்று இல்லாமை, ஸஹோதரக் குறைவு, குடல் சம்பந்தமான வியாதிகள் கொடுக்கும்.

4. சதுர்த்தஸ்தாநம்: துஷ்ட கிரஹங்கள் சேர்க்கை அல்லது த்ருஷ்டி இல்லாமல் குரு தீர்க்க பலத்துடன் இருப்பின் தாயாருக்கு பூர்ண ஆயுள், ஜாதகருக்கு வித்தை, ஸ்நேகிதர் கள் உதவி, மன அமைதி, பூமி க்ரஹ, வாகன ஸுகம் போன்றவைகள் ஏற்படும். ஸ்த்கர் மாக்கள், பொதுஜன ராஜீய விஷயங்களில் ஈடுபாடு அதனுல் முக்யத்வம் கீர்த்தி பெறுதல் உண்டாகும்.

5. பஞ்சமஸ்தாநம்: ஆத்மீக ஞானம், வேதாந்த விசாரணை ஏற்படும். புத்ரகார கரான குரு புத்ரஸ்தாநத்தில் இருந்தால் ஸந்தானக் குறைவு ஏற்படும். ஸத்காரியங் களிலேயே மனம் ஈடுபடும். சுபக்ரஹமான குரு த்ருகோண ஸ்தானத்தில் இருப்பது நன்மையே.

6. ஷஷ்டமஸ்தாநம்: ரோகத்தையும், சரீர பலஹீனத்தையும், பொதுஜன விரோதம், கடன் உபாதிகளையும் கொடுப்பார். சிலருக்கு பொதுஜனசேவையிலும், பந்துக்களிடமும் அப கீர்த்தி ஏற்படும்.

7. சப்தமஸ்தானம்: பாப க்ரஹங்கள் சேர்க்கை, அல்லது த்ருஷ்டி இல்லாமலிருந் தால், சிறந்த அறிவு, வித்தை, குடும்ப க்ஷேமம் உண்டாகும். ஆசாரசீலமும், அழகும் வாய்ந்த களத்ரம் ஏற்படும். குரு சந்த்ர சேர்க்கை குருசந்த்ர யோகத்தைக் கொடுத்தாலும் இந்த சேர்க்கை ஸப்தமஸ்தானத்தில் உண்டானுல் அகால விவாகம், குடும்ப சுகமில்லாமை சிலருக்குக் கொடுப்பது அனுபவத்தில் தெரிய வருகிறது. குரு ஸப்தமத்திலிருந்து ராகு, கேது, சனி போன்ற கிருஹங்கள் சேர்க்கை அல்லது திருஷ்டி ஏற்பட்டால் முறையற்ற வகையில் விவாகம் அல்லது தொடர்பு சிலருக்கு ஏற்படலாம்.

8. அஷ்டமஸ்தாநம்: பாபிகள் சேர்க்கை அல்லது பார்வை இல்லாவிட்டால் பூர்ண ஆயுள் கொடுக்கும். ஆனுல், ஆசாரக் குறைவு, புத்ரபீடை, சரீரத்தில் குடல், மார்பு, ஹ்ருதய ஸ்தானங்களில் ரோகம் சிலருக்கு ஏற்படலாம். முறையற்ற வகையில்தொடர்பு உண்டாகலாம்.

9. நவமஸ்தானம்: பாபிகள் சேர்க்கை அல்லது த்ருஷ்டியற்று குரு பகவான் திரு கோண ஸ்தாணமான 9இல் பலமாக இருந் தால் ஸகலகலா ஞானம், சீரிய கொள்கை, தனதான்ய ஸம்பத்து, புண்யகார்யங்களில் ஈடுபாடு, தேவதோபாஸனை, தர்ம சிந்தனை, கைங்கர்யம் பித்ர் ஆர்ஜித சொத்து, வேதாந்த விசாரணை, பொதுவில் இகபர ஸாதனங்கள் ஏற்படும்.

10. தசமஸ்தானம்: குரு 10ம் வீட்டில் இருப்பது விசேஷம். பொதுவாக பலம் பெற்ற குரு, சந்த்ரன் போன்ற கிரஹத்தின் சேர்க்கை அல்லது பார்வை, உண்டானவர்கள், நீதிபதி அமைச்சர், பொதுஸ்தல, மடாலய, தேவா லய, தலைவர்கள் சிறந்த மதகுரு, பேராசிரியர், புரோஹிதர் போன்ற பதவிகளை சிலர் வகிப் பார். தவிர, ராஜாங்க உத்தியோகம் ராஜங்க பட்டங்கள் பெறுவார். நல்ல காரியங்களில் ஈடுபடுவார்.

11. ஏகாதசஸ்தானம்: பொதுவில் அதிக தனமும் செல்வாக்கும் உண்டாகும். பூர்வ பக்ஷசந்த்ரன் சேர்க்கை அல்லது த்ருஷ்டி யால், புதை பொருள், பந்தயங்கள் மூலம் சிலர் அவற்றை அடையலாம்.

12. த்வாதசஸ்தானம்: தனநாசம், புத்ர நாசம் கொடுத்து துக்கத்தையும் உண்டாக்கி விரக்தியையும் ஆத்மீக விஷயங்களில் துறவி போல் ஈடுபடவும் செய்யும். சிலருக்கு சத் விஷயங்களிலும சுயநலமற்ற கார்யங்களிலும் அடிக்கடி தனவிரயத்தை உண்டாக்கலாம்.

**கோசர பலன்:** குரு 2, 5, 7, 9, 11 போன்ற ராசிகளுக்கு வருங்காலங்களில் சுப பலன்களைக் கொடுப்பார். குரு 3ம் வீடு வருங்காலத்தில் எல்லாத் துறையிலும் கெட்டதும் விபரீதமானதும் எதிர்பாராதது மான கெடுதிகளை உண்டாக்குவார். குரு ஒரு ராசியில் சுமாராக 1 வருஷம் தங்குவார்.

மனிதன் நாற்பது வயது வரையில் சரீர பலத்தையே முக்கியமாகக் கொண்டு சகல விவகாரங்களை நடத்துகிறான். அதனால் லக்னத்தைக் கொண்டு கோசார பலன் பார்க்கவும். பின் 60 வயது வரையில் சரீர பலம் க்ரமேண குன்றி புத்தி பலம் கொண்டு செயலாற்றுகிறான். ஆதலால் சந்த்ரன் நிற்கும் ராசி கொண்டு கோசாரம் பார்க்கவும். அறுபது வயதிற்குப் பின் புத்தி பலமும் ஒடுங்குவதால் ஆத்ம (ஜீவ) பலம் கொண்டு இயங்குகிறான். ஆதலால் சூரியன் ஜனன காலத்தில் நிற்கும் ராசி கொண்டு கோசாரம் பார்க்கவும். இவ்விதம் பார்ப்பது சிலருடைய சித்தாந்தம் ஜனன காலத்தில் எந்த ராசியில் குரு இருக்கிறாரோ அதிலிருந்து தற்காலம் குரு சஞ்சரிக்கும் ராசி வரையில் எண்ணுவது சிலருடைய கொள்கை.

இவைகள், ஷட்பலம் அஷ்டவர்க்கம், கிரஹ சமயம் போன்ற கணக்குப்படி கிரஹ ராசி பலன்களை அறிந்து. பிறகு நிர்ணயம் செய்வதே சிறந்ததாகும்.

**குருவுடன் இதர கிரஹ சேர்க்கை:** குரு சந்த்ர சேர்க்கை குரு சந்த்ர யோகத்தை கொடுக்கிறது. இது 2, 4, 9 போன்ற இடங்களில் ஏற்படுவது விசேஷம். லக்னம் ஸப்தமம் போன்ற இடங்கள் குடும்ப சுகத்தைக் கொடுப்பதில்லை. குருவும் லக்னதிபதியும் ஒருவருக்கொருவர் கேந்திரஸ்தானத்திலிருந்து லக்னதிபதி பலம் அடைந்தால் பொதுஜனத் தலைமை, கீர்த்தி முதலியவைகள் உண்டாகும். குரு, சந்த்ர, புத சேர்க்கை காதுகளின் ரோகத்தை உண்டாக்கும். குரு, சனி, சூர்ய கிரஹங்கள் 7 அல்லது 8வது ஸ்தானங்களில் இருப்பின் காச ரோகம், க்ஷய ரோகங்களை உண்டாக்கும். பலம் பெற்ற குரு, பாபக் கிரஹங்கள், த்ருஷ்டி சேர்க்கை இல்லாமல் தசமஸ்தானத்தில் இருப்பின் "அமல" யோகத்தைக் கொடுக்கிறது. இந்த ஜாதகன் யாவரும் போற்றும் சீலனாய் இருப்பான். குரு பகவான் வளர்பிறை சந்திரனுக்கு கேந்திரத்தில் இருப்பது "கஜகேசரி" யோகமாகும். இது கீர்த்தி, பிரதாபம், நற்குணம், நன்னடத்தை, சமூகத் தலைமை இவைகளைக் கொடுக்கும். குருவிற்கு 6, 8, 12ம் இடங்களில் சந்திரன் இருப்பின் "சகட யோகத்தைக்" கொடுப்பார். இத்தகைய யோகக்காரருக்கு வாழ்வில் அடிக்கடி ஏற்றத்தாழ்வும் சுக துக்கங்களும் உண்டாகும். குரு, சுக்ரன் சேர்க்கை வாழ்க்கையில் இகபர ஸாதநங்களைத் தடுத்து குறைத்து விடும். குரு, ராகு அல்லது கேதுவுடன் கூடில் "குரு சண்டாள" யோகம் ஏற்படுகிறது. இது ஸ்திரீகளுக்கு பொதுவில் கெடுதியான பலனைக் கொடுக்கும். இந்த சேர்க்கை 4ம் வீட்டில் ஏற்படின் அவர்களின் ஆசரணைகளைக் கெடுக்கும். பொதுவில் வியாழக்கிழமை பிறந்தவர்களுக்கு ஒரு அளவில் குரு ஆதிக்யம் உண்டு.

ரேகை சாஸ்திரப்படி (Palmistry) கையில் ஆள்காட்டி விரலுக்கு அடியில் உள்ள பாகம் குருமேடாகும். இது மேற்படி விரலின் நேர் அடி பாகத்தின் மத்தியில் சரிவர அமைந்து மற்ற மேடுகளைக் காட்டிலும் உன்னதமாக இருப்பின் அவர்கள் குரு ஆதிக்யம் உள்ளவர்கள் ஆவார்கள். அத்தகையோர் அதிக ஆசாபாசமும், வித்தை, பொது ஜனசேவைகள் அதிகமுள்ள வராயிருந்து பெருமை, கௌரவம், அதிக ஆசை உள்ளவர்களாய் இருப்பார்கள், குரு ரேகை அல்லது ஹ்ருதய ரேகை புத மேட்டின் அடியிலிருந்து சூர்ய, சனி மேடுகளுக்கு அடிப்புறம் வந்து குரு மேட்டில் முடியும். குரு மேடு ஹ்ருதய ரேகையை நோக்கி இருந்தால் ஆசாபாசங்கள் அதிகங் கொண்டு பல துறைகளில் பிடிவாதத்துடன் நடந்து கொள்வார்கள். ஹ்ருதய ரேகைக்குக் கீழ்புறமாய் சந்த்ர மேட்டிலிருந்து கிளம்பி செவ்வாய் மேட்டை நோக்கி வரும் புத்தி ரேகையைச் சார்ந்து இருந்தால் வித்யா கர்வத்துடன் இருப்பார். சுக்கிர மேட்டின் அடிபாகத்தில் உள்ள ஆயுள் ரேகையின் புறம் நோக்கிச் சாய்ந்திருந்தால் தன் குலத்தின் பெருமையைப் பாராட்டிக் கொள்வார்கள்.

குருமேடு நன்கு உயர்ந்து ஆதிக்யம் பெற்றவர்கள் பல பொது ஜன ஸ்தாபனங்களுக்கு தலைவராக இருப்பார், நாட்டின் நலனையும் மக்களின் முன்னேற்றத்தையும் கருதி பாடுபடுவார். விசேஷமாக தன் மதத்தின் மேன்மையைப் பரப்பப் பாடுபடுவார்கள். குரு ஆதிக்கத்திற்கு ஆள் காட்டி விரல் நன்கு உயர்ந்து நேராக அமையவேண்டும். ஆனால் நடுவிரலைவிட சற்று குட்டையாக இருக்க வேண்டும். இவர்கள் நடுத்தரமான உயரமும் திடகாத்ர சரீரத்தையும் ஆரோக்யத்தையும் உடையவர்களாக இருப்பார்கள். இவர்கள் பார்வை பிரகாசமாகவும் கவர்ச்சியாகவும் இருக்கும். சாத்விக குணமும் இனிய வார்த்தை பேசுபவர்களாவும் இருப்பார்கள். புத்தி ரேகை ஆரம்பத்திலிருந்து ஓர் ரேகை கிளம்பி குரு மேட்டில் சென்றிருந்தால் தீவிர ஆசாபாசமும், கீர்த்தி, பிரதாபம் இவைகள் அடைய ஆசை உள்ளவர்களாகவும் இருப்பார்கள். இவ்விதம் பல கோடுகள் மேல் நோக்கிச் சென்றிருந்தால் பலவித துறைகளில் ஈடுபட்டு வெற்றிபெற பாடுபடுவார்கள். குருமேட்டில் ஓர் வளையம் நன்கு அமைந்திருந்தால் இதை ''சாலமன்'' ரேகை என்பார்கள். இதனால் சிறந்த ஞானம், நீதிநெறியில் பற்று, தெய்வீக வாழ்க்கை ஏற்படும். குருமேட்டில் ஓர் சதுரக் குறியிருந்தால் அவனை அது ரக்ஷிக்கக்கூடியதாகும். அவ்விதம் ஓர் முக்கோணமிருப்பின் புத்தி சாதுர்யம், பேரறிவு, சிறந்த தீரம் முதலியவைகளைக் கொடுக்கும்; வலைக்குறி இருப்பின் வீண் அகம்பாவம், கர்வம், அடக்கமில்லாமை, தீய செயல்களில் ஈடு படுபவராகவும் இருப்பார்கள். குருமேடு கையில் இல்லாதவர்கள் மிகவும் தாழ்மையான வாழ்க்கை உள்ளவராவார்கள். இவர்கள் இருப்பிடமோ இவ்ரைப்பற்றியோ பிறருக்குத் தெரிய வராது.

எண் சாஸ்திர (Numerology) ப்படி குருபகவான் எண் 3 ஆகும். மேற்படி எண்ணின் வகையைச் சேர்ந்த எண்கள் 6, 9 ஆகும். மூன்று மூன்றாக சேர்க்கின் 6, 9 எண்கள் வருகின்றன. 3, 12, 21, 30 தேதிகளில் பிறந்தவர்கள் குரு ஆதிக்கத்தில் சேர்ந்தவர்கள். வருஷந்தோரும் 3 எண்ணிற்கு உகந்த காலம் பிப்ரவரீ 10 தேதி முதல் மார்ச்சு 27 தேதி ஆகும். அதேபோல் நவம்பர் 21 தேதி முதல் டிசம்பர் 27 தேதி வரையில் குருவின் ஆதிக்க காலமாகும். மூன்று எண் கொண்ட தேதிகளில் பிறந்தவர்களுக்கு அதிக ஆர்வம் ஏற்படும். அவர்கள் ஸாதாரண அந்தஸ்தோடு திருப்தி அடையமாட்டார்கள். அவர்கள் உயர்ந்த நிலைக்கும் மிகுந்த அதிகாரம் செலுத்தும் பதவிக்கும் செல்ல எப்பொழுதும் முயலுவார்கள். அதிகாரம் செலுத்துவதில் மிக்க திறமை வாய்ந்தவர்கள். அவர்களில் பலர் அமைதி, ஒழுக்கம் இவைகளை நிலைநிறுத்தும் சீர்திருத்த வாதிகளாவார்கள். உத்தியோகம், வியாபாரம் போன்றவைகளில் முக்யத்வமும் தலைமையும் வஹிக்க முயலுவார்கள். விடா முயற்சியால் வெற்றியும் பெறுவார்கள்.

ஆனால் தன் அதிகாரத்தை பிறர் மேல் செலுத்தும் வகையில் அநேகர் பிறர் விரோதத்தையும், வெறுப்பையும் அடைவார்கள். அவர்கள் எளிதில் நரம்பு பலஹீநத்தை அடைவதால் மனச் சோர்வு ஏற்பட்டு முன் கோபமடைவார்கள். சிலருக்கு ஸந்ததி ஏற்படுவதில்லை. பொதுவாக இவர்களுக்கு ஸ்வாஸ கோசம், ஹ்ருதயம், குடல் போன்ற இடத்தில் வியாதி ஏற்படும்.

இவர்களுக்கு உகந்த நிறம் லேசான சாம்பல் நிறம், வெண்மை போன்றவைகளாகும். புஷ்பராகம், முத்து போன்றவைகள் உகந்த ரத்னங்களாகும். அவர்கள் வைரக் கற்கள் பதித்த ஆபரணங்கள் அணிவதால் நன்மை உண்டு.

சங்கீத கலையின்படி ''நிஷாதம்'' ஸப்தஸ்வரங்களில் குருவிற்கு உகந்தது. ராகங்களில் ''சாரங்கா'' இவருக்கு உரியது, என்று தெரிய வருகிறது.

எவ்விதம் நாம் நிதர்சனமாக பூமியை ஸ்தூலமாகப் பார்ப்பினும் அதை ''பூமா தேவீ'' என்று அதன் அதிஷ்டான தெய்வத்தைக் கொண்டாடுகிறோமோ, அதேபோல், குரு மண்டலத்தை ஸ்தூலமான ஒரு கிரகம் (Physical Body) என்று நாம் காண்போமானாலும் அதில் சூக்ஷ்மமான தெய்வீகத்தன்மை வாய்ந்த குரு பகவான் விளங்குகிறார்.

இவ்வித கிருஹத்தில் தசா புக்தி, அந்தரம், கோசாரங்களால் ஏற்படும் தோஷ பிரதி கூலங்களை மந்த்ரபூர்வமான கீழ்கண்ட ஜபங்கள் சாந்தி செய்து அனுகூலங்களைக் கொடுக்கும் என்பது அனுபவ ஸித்தாந்தம்.

### குருபகவான் மஹாமந்த்ரம்

**த்யானம் :**

தேஜோமயம் சக்தி த்ரிசூலஹஸ்தம்,
ஸுரேந்த்ரஸம்ஸேவித பாதபத்மம் ||
மேதாநிதிம், மத்ஸ்யகதம் த்விபாஹும்,
குரும்ஸ்மரேத் மாநஸ பங்கஜேஹம் ||

**மூலமந்த்ரம் :**

ஓம் ஹ்ரீம் ஸ்ரீம் ப்லீம் ஐம்
க்லௌம் க்ரஹாதிபதயே,
ப்ருஹஸ்பதயே ப்லீம்
ட: ஐம்ட: ஸ்வாஹா ||

இந்த மந்திரத்தை குருமுகமாய் கிரஹித்து காலையில் 108 தடவை செய்ய நலம் உண்டாகும்.

குரு பகவானால் ஏற்படும் மஹத்தான தோஷங்களை லக்ஷ்மி தக்ஷிணாமூர்த்தி, மேதா தக்ஷிணாமூர்த்தி போன்ற மஹாமந்த்ரங்களைக் குருமுகமாய் ஸ்விகரித்து தினம் அல்லது வியாழக்கிழமை தோறும் ஜபம் செய்வது மிகவும் விசேஷமாகும்.



# ருத்ராக்ஷ மஹிமை

பரமசிவன் த்ரிபுராஸுரனை ஸம்ஹரிக்க அகோராஸ்த்ரத்தை நினைக்கும்கால் அவர் கண்களிலிருந்து உண்டான கண்ணீர் ருத்ராக்ஷ மரங்களாயிற்று. அவை 38 வகையாகும். அவர் சூர்ய வடிவமான கண்ணிலிருந்து கபில வர்ணமான 12 வகை ருத்ராக்ஷங்களும் சோம மயமான நேத்ரத்திலிருந்து வெண்ணிற ருத்ராக்ஷங்கள் 16ம் தேஜோமய நெற்றிக் கண்ணிலிருந்து 10 வகை ருத்ராக்ஷங்களுமுண்டாயின.

ஏகமுக ருத்ராக்ஷம் ஸதாஶிவ ஸ்வரூபம், ப்ருஹ்ம ஹத்தி தோஷத்தை நீக்கும். இருமுகம் கொண்டது அர்த்தநாரீஸ்வரஸ்வரூபம், பாப மகற்றி சந்தோஷப்படுத்தும். மும்முகம் அக்னி ரூபம், ஸத்ரீஹத்தி தோஷ நிவர்த்தி செய்து ஆநந்தமளிக்கும். நான்கு முகம் ப்ரஹ்ம ஸ்வரூபம், ஞானப்ரதம், மனுஷ ஹத்தி நிவாரணம். ஐந்து முகம் ருத்ராம்சம், சாஸ்த்ர விரோதமான, போஜன, ஸம்ஸர்க்கங்களின் தோஷமகற்றும்.

ஷண்முகம்:— ஸுப்ரஹ்மண்யப்பிரதம், ஷண்முக, கணேசப்ரீதியை அளிப்பது, ப்ருஹ்ம ஹத்தி தோஷ மகலும். ஏழுமுகம், ஸப்தமாத்ருகைகளையும், சூரியனையும் ஸந்தோஷப் படுத்தி ஞானத்தையும் ஆரோக்யத்தையும் அளிக்கும். எட்டு முகம், விக்னேஶ ப்ரீதிகரம், பல தோஷங்கள் நிவர்த்தி. ஒன்பது முகம் பைரவஸ்வரூபம், புக்திமுக்திகளைத் தரும். தஶமுகம் ஜநார்த்தன ஸ்வரூபம் பூதப்ரேத பைசாச பாதா நிவாரணம். ஏகாதசமுகம் ருத்ராம்ஶம் அஶ்வமேத ராஜஸூய யாக பலனையும் கோடிகோதான புண்யத்தையும் அளிக்கும். பனிரெண்டு முகம், விஷ்ணு ஸ்வரூபம் பல யாக பலனைத் தரும், வ்யாதி நாஶகரம். பதிமூன்று முகம் ஷண்முக, அங்கப்ரீதி ரஸ, ரஸாயன ஸித்தி தரும், ஸகல காமங்களையும் தரும், பதினான்கு முகருத்ராக்ஷம் தலையில் தரிக்க உகந்தது. ஸ்ரீ பரமேஸ்வரனே அவனிடம் வஸிப்பார். ஸகலரோக மகலும்.

ருத்ராக்ஷ மணிபவர்கள் மதுமாம்ஸாதிகளை விலக்க வேண்டும். க்ரஹண, விஷு, ஸங்க்ரமண

அயன, அமாவாஸ்யாதி பௌர்ணிமி காலங்களில் அணிய ஸகல பாபங்களுமகலும். கழுத்தில் 32, தலையில் நாற்பது, ஒவ்வொரு காதிலும் ஆறு, ஆறு, கரங்கள் ஒவ்வொன்றிலும் 12, புஜங்களில் பதினாறு, பதினாறு, மார்பில் 108, ருத்ராக்ஷங்கள் அணிவது விசேஷம். 21 தலைமுறை முன்னோர்களுக்கும் நற்கதியுண்டாகும். மார்பில் 108, அல்லது 54 அல்லது 27 ருத்ராக்ஷ மணிவது மிக்க புண்யமளிக்கும்.

ஸ்நானம், ஜபம், ஹோமம், வைஸ்வதேவம், சிவபூஜை, ப்ராய சித்தம், ஸ்ராத்தம், தீக்ஷை, முதலியவைகள் செய்யும் பொழுது ருத்ராக்ஷ மணிவது சாலச் சிறந்தது. பட்டு அல்லது எருக்க நாரில் சேர்த்து ருத்ராக்ஷ மணியலாம். ஒருவர் அணிந்ததை மற்றவர் அணியலாகாது, அசுத்தனா யிருக்கும் பொழுது அணியக் கூடாது. ருத்ராக்ஷ மாலையால் ஜபம் செய்வது விசேஷ பலனளிக்கும்.

புருஷரில் விஷ்ணு, க்ரஹங்களில் சூர்யன், நதியில் கங்கை, முனிவரில் கஸ்யபர், தேவரில் ஸிவன், தேவியில் கௌரி, மணிகளில் ருத்ராக்ஷ மாலை சிறந்ததெனக் கூறப்பட்டிருக்கின்றன.

பாபிகளும், மிலேச்ச, சண்டாளர்களும் ருத்ராக்ஷ மணிவதால் சிவ ஸாயுஜ்ய மடைவார்கள். தங்கமணி, முத்து, பவழம், ஸ்படிகம் வைடூர்யங்களுடன் கலந்தும் ருத்ராக்ஷ மாலை அணியலாம். ருத்ராக்ஷம், ஸகல ஸம்பத்துக்களையும் அளித்து ஏழையையும் தனிகனாகச் செய்யும்.

—தேவீபாகவதம்

———o———



# வல்லாரை

இம் மூலிகை நீர் கசிவுள்ள எல்லா இடங் களிலும் பயிராகக் கூடிய சிறு செடி. மேல் நாட்டு வைத்திய நிகண்டில் 'Hydrocotyle Asiatica' என்ற பெயரையும் சம்ஸ்க்ருதத்தில் ''ப்ராம்ஹீ'' என்ற பெயரையும் உடையது. வித்தையை அபிவிருத்தி செய்யும் அளவில் புத்தி கூர்மையைக் கொடுக்கக் கூடிய சக்தி இம்மூலி கைக்கு இருப்பதால் இது ''ப்ராம்ஹீ'' ''ஸரஸ்வதி'' என்று அழைக்கப்படுகிறது.

வைத்திய சாஸ்த்திர முறையில் இதன் இலை, பழம், வேர் எல்லாவற்றையும் உபயோகப் படுத்தப் பட்டிருக்கிறது. வேருக்கு வீர்யம் அதிகம். இம் மூலிகையில் தங்க ஸத்து இருப் பதால் காயகல்பங்களில் கூட இதை உபயோகப் படுத்துகிறார்கள். இது பொதுவாக தேக ஆரோக்யத்தை உண்டு பண்ணும் குணம் வாய்ந் தது. தவிர மூத்திராசயம், கர்ப்பை முதலிய பாகங்களில் உள்ள எரிச்சல்களை நீக்கி நீரைப் பிரித்து உஷ்ணத்தை சமனம் செய்யும். சரீரத்தி லுள்ள நமச்சல் அரிப்புகளை நீக்கும்.

வல்லாரை பொதுவாக நரம்புகளையும் மூளையையும் சீர் செய்து வலுவாக்கும் சக்தி வாய்ந்த Vitamin B நிறைந்தது. அதனால் ஞாபக சக்தி அதிகம் ஏற்படலாம். ஆனால் வல்லாரையை உஷ்ணப் படுத்தினால் அதிலுள்ள Vitamin சக்தி கெட்டு விடுகிறது. இந்த மூலிகை யைத் தொடர்ச்சியாக அதிக அளவில் உட் கொண்டால், தலைவலி, மயக்கம் முதலியவை கள் உண்டாகும்.

நிழலில் உலர்த்தி நன்கு காய்ந்த வல்லாரை இலையை சூரணம் செய்து வேளைக்கு 5 அரிசி இடை வீதம் இருவேளை உட்கொண்டால் மேற் கூறிய நன்மைகள் ஏற்படும்.

வல்லாரை இலையை விழுதாக அரைத்து புண்களுக்கும், கண்ட மாலை, பரங்கி வியாதி யால் உண்டாகும் புண், குஷ்டரோகம் முதலிய வைகளுக்கும் மேல் பூசலாம். கண்டமாலை, சீல்வாய்வுகள் போன்ற உபாதிகளுக்கும் உபயோகப் படுத்தலாம். யானைக்கால், அண்ட





# ஆருதாரம்

நாம் இடைகலை பிங்கலையாக நாஸியின் வழியாக ஸ்வாஸம் விடுகிறோம். அது நாழிகை ஒன்றுக்கு 360 தடவையாக, நாள் ஒன்றுக்கு 21,600 ஸ்வாஸமாகிறது. அவைகளில் 7200 வெளியாகி மிச்சம் உள்ளடங்கும். இவ்விதம் பிராணவாயு நாஸிவழியாக சஞ்சரிக்கும் பொழுது செலவாகி வருகிறது.

இந்த ஸ்வாஸம் நாஸி வழியாய் ரேசக பூரகமாக செல்லாமல் சுசும்நா நாடிவழியாகச் செல்ல ஸாதனமளிப்பதே யோக சாஸ்திர மாகும். மூலாதாரத்தையும் ஸஹஸ்ராரத்தை யும் முடிவாகக் கொண்ட சுசும்னு நாடியில் ஸ்வாஸம் சஞ்சரிப்பதால் பிராணவாயு செல வாகிறதில்லை. ஆதலால் ஆயுள் குறைவு தினே தினே ஏற்படுவது மில்லை. அவ்வித சாதனத் தால் பிராணவாயு மூலாதாரத்தில் உள்ள குண்டலினி சக்தியை எழுப்பி ஷட்சக்கரங் களைப் பேதித்து ஸஹஸ்ராரத்தில் உள்ள சிவத் தில் சக்தியைச் சேர்க்கிறது. ஆதாரங்களின் லக்ஷணம் ;—

மூலாதாரம் :—கால் எலும்புகளுக்கு இடை யே குதத்திற்கும் குஹ்யத்திற்கும் நடுவே குண்டலினி சக்தியுடன் த்ரிகோணகாரமாய் இருக்கும், பிருதிவி தத்வம் கொண்டது, நாலிதழ் கொண்ட கடம்ப மலரைப் போன்று மாணிக்க நிறத்துடன் விளங்கும். இதில் ப்ரணவாகாரம் கொண்ட விநாயகர் வல்லபா சக்தியுடன் வீற்றிருப்பார். மூலதாரத்திலுள்ள 4 இதழ்கள் வ,ஷ,ஸ,ஶ என்ற அக்ஷரங்கள் கொண்டன.

ஸ்வாதிஷ்டானம் :—மூலாதாரத்திற்கு 2 விரக்கடை மேலுள்ளது. நாற் சதுரத்தின் நடுவே ஆறிதழ் கொண்ட புஷ்பமும் அதன் நடுவே நகாரமும், அதன் மத்தியில் சரஸ்வதீ சமேத பிரும்மாவையும் காணலாம். பொன் னிறம் கொண்ட அம் மலரிதழ்களில் ப,ப,ம, ய,ர,ல என்ற அக்ஷரங்களைக் காணலாம்.

மணிபூரகம் :—இது ஸ்வாதிஷ்டானத்திற்கு 8 விரற்கடை மேல் உள்ளது. இது உந்திஸ் தானத்தில் மூன்றும் பிறையை ஒத்திருக்கும். அதன் நடுவே பத்து இதழ் கொண்ட ஓர் புஷ்பம் தோன்றும். அதன் நடுவில் மஹாலக்ஷ்மி மஹாவிஷ்ணு வீற்றிருப்பார்கள். மரகதநிறம் கொண்ட மலரின் 10 இதழ்களில் ட,ட,ண,த, த,த,ந,ப,ப என்ற அக்ஷரங்கள் தோன்றும், அப் புவின் தத்வம் கொண்டது.

அனுகதம் :—இது மணிபூரகத்திற்கு 10 விரற்கடை மேலுள்ளது. இது ஹ்ருதய கமல பாகமாகும். தேயுஸ்தானம். திருகோணகாரம் மத்யே அக்னி நிறம் கொண்ட 12 இதழ் உடைய மலர் வடிவம் அதன் மத்தியில் சிகா

ராக்ஷர மத்தியில் ருத்ரனும் பார்வதியும் வீற்றிருப்பார்கள். பன்னிரண்டு இதழ்களில், க,க,க,க,ங,ச,ச,ஜ,ச,ஞ,ட,ட அக்ஷரங்களுண்டு.

விசுத்தி:—அனாகதத்திற்கு 10 விரல் பிரமாணம் மேலே உள்ள இடம் விசுத்தியாம். இது கண்டத்தில் வாயுஸ்தானத்திலுள்ளது. ஷட்கோணாகாரம், ஷோடசதளம் கொண்ட மலரின் உருவம். மத்தியில் வகாராக்ஷரம், அந்த அக்ஷர நடுவில் மஹேஶ்வர மஹேஶ்வரி, கருமை நிறமானது. அ முதல் அ: வரையில் கொண்ட 16 ஜீவாக்ஷரம் கொண்ட புஷ்பதளம்.

ஆஞ்ஞை :—விசுத்திக்கு 12 விரற்கடை மேலுள்ள லலாடஸ்தானத்தில் கனகமயமாய் புருவமத்தியான ஆகாசஸ்தானத்தில் 3 இதழ் கொண்ட புஷ்ப நடுவில் உள்ளது. அவ்வக்ஷரத்தின் நடுவில் சதாசிவம் மனோன்மணி தேவியுடன் விளங்குகிறார். ஸ்படிகநிறம் கொண்டது ஹ,ய,ள அக்ஷரங்களைக் கொண்டது.

இவ்வாதாரங்களின் இடையே அக்னி ஆதித்ய ஸோம மண்டலங்கள் இருக்கின்றன.

அக்னி மண்டலம் மூலாதாரத்துக்கு மேலும் சூரிய மண்டலம் உந்திக்குமேலும் அமிர்த வர்ஷிணியான சந்த்ர மண்டலம் சிரஸிலும் இருக்கின்றன.




# பீடத்தின் செய்திகள்

1. பீடத்தில் ப்லவங்க வருஷ வஸந்த நவராத்ரி பூர்த்தி இரவு நூரு மண்டல ஆராதனை ஸமயம் சரபோபாஸனை வெபூஜை. ஸ்ரீ வித்யா உபாஸகர்களில் அநுஷ்டானத்தில் உள்ள ப்ரம்மஸ்ரீ S. பரமசிவ ஐயர், ஸ்ரீ V S. அங்கப்பன், ஸ்ரீ S. V. நாராயண ஐயர் முதலியோர்களுக்கு வெள்ளிப் பதக்கத்தில் வரையப்பட்ட பிருதுகள் வழங்கப்பட்டன.

2. ஷ வஸந்த நவராத்ரி திருப்பணந்நாள் மஹாஸந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ அருள் நந்தி தம்பிரான் அவர்கள் பீடத்திற்கு அன்பளிப்பாக வழங்கிய பஞ்சலோகத்தால் செய்யப்பட்ட ஸோமாஸ் கந்தமூர்த்தி ப்ரதிஷ்டை செய்யப்பட்டது.

3. பம்பாயில் வஸிக்கும் பீடத்தின் சிஷ்யரான ஸ்ரீ V. S வைத்யநாதன், R. ராமஸ்வாமி R. R. ரங்கநாதன் முதலியோர் சில மந்த்ர சாஸ்த்ர ஏட்டுப் பிரதிகளும், தந்த்ர சாஸ்த்ர ஏட்டுப் பிரதிகளும் வாங்கி பீடத்தின் நூல் நிலையத்திற்கு வழங்கினார்கள்.

4. தஞ்சாவூர் ஸரஸ்வதி மஹால் லைப்ரரி வெளியிடான ''ப்ரபஞ்சஸார ஸார ஸங்க்ரஹ:'' நூலின் முதல் பாகத்தை ஸ்ரீ R. ஷண்முக சிகாமணி அவர்களும், இரண்டாம் பாகத்தை ஸ்ரீ S. V. நாராயண ஐயர் அவர்களும் பீடத்தின் நூல் நிலயத்திற்கு வழங்கினார்கள்.

5. சென்ற அக்டோபர் மாதம் கிண்டி, தொழிற்பேட்டை காலனி விநாயகராலயத்தில் தர்ம சாஸ்தா கோவில் கும்பாபிஷேகத்திற்கு பீடத்திலிருந்து சாஸ்தா யந்த்ரம் தயாரித்துக் கொடுக்கப்பட்டது.

6. ஆவடிக்கடுத்த பருத்திப்பட்டி கிராமத்தில் சென்ற அக்டோபர் மாதம் நடைபெற்ற ஆஞ்சநேயர் ஆலய கும்பாபிஷேக காலத்தில் ஓர் ஆஞ்சநேய யந்த்ரம் பீடத்தால் ஸ்தாபிக்கப் பட்டது.

7. சாரதா நவராத்ரி காலத்தில் விஜயதசமி தினம் பீடத்தின் சிஷ்யர்களில் சுமார் 5
பர்களுக்கு விசேஷ மந்த்ர ஸ்வீகாரம் நடைபெற்றது.

8. இவ் வருஷம் வைசாக, ச்ராவண சுத்தத்தில் பீடத்தைச் சார்ந்த சிஷ்யர்கள் சிலா
வதீக்ஷை, பஞ்சாக்ஷர ஜபம், பஞ்சாயதன பூஜை எடுத்துக் கொண்டார்கள்.

9. பீடத்தின் சிஷ்யரான ஸ்ரீ K R. மாணிக்கம் (alias சுப்ரமண்ய சர்மா) தன் சொந்த செலவில் வனதுர்கா கல்பத்தின் பிரதி ஒன்றை பீடத்தின் நூல் நிலையத்திற்கு வழங்கினர்.

10. நமது பீடத்தின் முக்கிய சிஷ்யரான கானஸுதார்ணவ ஸ்ரீ குஞ்சுமணி பாகவதர் பெங்களூர், பம்பாய், பரோடா, முதலிய இடங்களில் உள்ள ஸ்தலங்களில் விஜயம் செய்து நாமஸங்கீர்த்தனம் நிகழ்த்திய காலங்களில் பீடத்தின் கார்யக்ரமங்களைப்பற்றி ப்ரவசனங்கள் செய்தார்.

11. பீடத்தின் அத்யக்ஷரின் நண்பரும், சுமார் 25 வருஷத்திற்கு முன் சென்னையில் சிறிது காலம் வசித்திருந்து தற்சமயம் ந்யூயார்க்கில் வியாபார ப்ரமுகராக இருந்துவரும் ஸ்ரீ E. B. Reid என்பவரும் அவரது அமெரிக்க நண்பர்களும் விரும்பியபடி அவர்கள் செலவில் சென்ற ப்லவங்க வருஷப் பிறப்பு கொண்டாட்டம் விமரிசையாக பீடத்தில் நடைபெற்றது. அச்சமயம் ஸ்ரீ K. R. மாணிக்கம் அவர்கள் மேற்பார்வையில் சுமார் 100 சிறுவர் சிறுமியர்களுக்கு சிற்றுண்டி அளிக்கப்பட்டது. இவ்வைபவத்தைப் பற்றி ஸ்ரீ S V. நாராயணன் 23-4-67 தினம் வெளிவந்த '' ஹிந்து '' பத்திரிகையில் விரிவாக விமர்சனம் செய்துள்ளார்.

12. பீடத்தின் சிஷ்யர்களான Sri. G. M ஸ்ரீனிவாஸன் (Sub-Editor Hindu) அவர்கள் இவ்வாண்டு நவம்பர் மாதம் காலமானதும்; ஸ்ரீ I. A. சிதம்பரம் பிள்ளை M.A.,M.L.A., அவர்கள் இவ்வருஷம் டிஸம்பர் இறந்ததும் பீடத்திற்கு ஓரளவு நஷ்டத்தை விளைவித்தது.

# பீடத்தின் நிர்வாகம்

## பீட அத்யக்ஷர்: ஸ்ரீ பூர்ணாநந்தநாத தீக்ஷித் என்கிற ஸ்ரீ M. R. கிருஷ்ணமூர்த்தி அய்யர்

### கௌரவ அங்கத்தினர்கள்

Sri N. Somasundaram, Retired Judge of the High Court of Madras.
,, Dr. S. Paramasivam, T'Nagar, Madras-17. (Gnananandanatha Dikshit)
,, M. V. Pattabhirama Iyer, West Mambalam, Madras-33.
,, R. Krishnamurthy, Retired Principal, Pachaiyappa's College, Madras.
,, V. S. Angappan, Professor of Physics, Engineering College, Madras. (Prakasanandanatha Dikshit)
,, S. V. Narayanan, Superintendent, Education Department, Madras-9. (Subhaganandanatha Dikshit)
,, S. Vadivelu, Retired Special Officer, Office of the D. S. E., Madras.
,, K. R. Manickam, (alias Subrahmanya Sarma) Principal, Teachers' College, Saidapet, (Subhaganandanatha Dikshit)
,, Ganasudharnava Kunjumani, United India Fire & General Insurance Co., Ltd., Madras. (Prakasanandanatha Dikshit)
,, P. P. Chandrasekharan, United India Fire and General Insurance Co., Ltd., Madras. (Satyanandanatha Dikshit)
,, S. Krishnan, Proprietor, Huxley Press, Madras.
,, A. Devanatha Iyengar, Nungambakkam, Madras.
,, T. T. Kuppuswamy Chettiar, Iron Merchant, Madras.
,, N. Mani, National Insurance Co., Ltd., Calcutta, (Prakasanandanatha Dikshit)
,, M. A. Krishnamurthy, Assistant Director of Employment and Training, Madras.
,, N. K Vinayakam, Director of Supplies & Disposals, Madras.
,, K. Ramiah Chettiar, Manager, A.R.C , Schools, Madras.
,, Al. Sathappa Chettiar, Deputy Secretary, Indian Bank, Madras.
,, B. S. Somasundaram, District Judge, Cuddalore.
,, M. Vaidyanatha Iyer, Bhatts Drappery, Madras.
,, R. L. Srinivasa Mudaliar, Retired Judge of the City Civil Court, Madras.
,, S. Pushpavanam Iyer, Iron Merchant, Madras.
,, P. V. Ramanatha Iyer, Madras-1.
,, S. Guruswamy, Southern Railways, Ambattur.
,, S Ramamurthy, Professor of Physics, Govt. Arts College, Madras.
,, R. Ganesan, West Mambalam, Madras.
,, M. R. Subramania Iyer, General Merchant, Madras.
,, T. T. Shanmuga Vadivel, Iron Merchant, Madras.
,, T. N. Raghunathan, Advocate, Bangalore.
,, G. S. Krishnamurthy, Sub-Judge, Kumbakonam.
,, A. V. Suryanarayanan, D.L W., Varanasi.
,, S. Vaidyanatha Iyer, Vasudevapuram, Madras-33.
,, C. D. S. Mani Iyer, Thambu Chetty Street, Madras.
,, C. R. Balachandran, C/o Ganapathy & Co., Madras.

Sri V. Chintamani Iyengar, New Street, Madras-1.
" R. R. Ranganathan, Chembur, Bombay.
" T. K. Vaidyanathan, Thirumangalakudi, Aduthurai.
" T. R. Balasubramania Chettiar, Office of the D. S. E., Madras.
" Dr Luce Sonnangel Antonio, M.D., Rome.
" V. K. Balasubrahmanian, Indian Bank Ltd., Palacode, Dharmapuri Dt.
" V. Venkatarama Sastri, Kodambakkam.
" Gopala Sastri, Kodambakkam.
" V. S. Balasubramaniam, Nagpur.
" S. R Sundaram. Lakshminarayanan St, West Mambalam.
" S. R. Sivaraman, Lakshminarayanan St, West Mambalam.
" R. Balaguruswamy. Asst. Station Master, Tiruttani.
" V. Srinivasa Iyer, Liptons, G. T. Madras.
" S. Pandurangam, Engineer, Highways Deptt., Nagercoil,
" N. Ramakrishna Iyer, Coimbatore-9.
" R Ramaswamy, Sion, Bombay.
" R Shanmukhasikamani, D.R.O., Madurai.
" R. Sitaraman, West Mambalam.
" V. S Vaidyanathan, Chembur, Bombay.
" S. S. Rangan, Bombay,
" M. P. Radhakrishnan, State Bank of India, Chirala.
" N. Bangariah, Reserve Sub-Inspector Madras Police.
" S. Rajaraman, Mettur Dam R.S.
" K. S. Venkataraman, T'Nagar, Madras.
" S. Sundaresan, Subramanianagar, Madras-33.
" V. Arumugam Pillai, Choolai Medu, Madras.
" P. T. Gopal, Paruthipatti, Avadi, Madras.
" R. Gopalakrishnan, Tatabad, Coimbatore.
" S. Rajagopalan, Tatabad, Coimbatore.
" M. K. Subramanian, United Commercial Bank Ltd, Sowcarpet, Madras.
" M. S. Srinivasan, Triplicane, Madras.
" R. Jayaraman, State Bank of India, Ootacamund.
" R. Krishnamurthy, Bareilly, U.P.
" R. Gopalan, Madras.
" M. Tholasingam, Madras.
" V. S. K. Velu, Visakhapatnam.
" K. Narayanaswamy, Katchaleswara Agraharam, Madras.
" A. V. Srinivasan, Vasudevapuram, Madras.
" V. K. Swaminathan, Hyderabad.
" S. Rajagopalan, Accounts Officer, Madras-28.
" S. R. Narasimha Iyer, Sankaridrug.
" C. S. Ramanathan, Best & Co., Madras.
" M. S. Subrahmanyan, Ordnance Factory, Khamaria.
" S. Venkataraman, Ordnance Factory, Chandrapur.
" R. Chandrasekharan, Radhakrishnan St, Madras-17.
" Dr. V. S. Manishanker, Villiwalkam.

## ஷோடச அலங்கார தீபங்கள்

(பீடத்தில் பூஜா காலத்தில் உபயோகிக்கப்படுகின்றவைகள்)

1. மூஷிகதீபம்
2. கஜதீபம்
3. அஸ்வதீபம்
4. குக்குடதீபம்
5. ஹம்ஸதீபம்
6. ரிஷபதீபம்
7. வியாக்ரதீபம்
8. மயூரதீபம்
9. ஸிம்ஹதீபம்
10. கன்யாதீபம
11. புருஷதீபம்
12. ஸோமதீபம்
13. சூர்யதீபம்
14. ஸர்ப்பதீபம்
15. மேருதீபம்
16. நக்ஷத்ரதீபம்



குரு கிருபா நிதி. M. V. பட்டாபிராம ஐயர்

சென்ற 1966ம் வருஷம் எங்களால் பிரசுரிக்கப்பட்ட (Souvenir) வெளியீட்டைப் பற்றி, "ஹிந்து" "மெயில்" "ஸண்டே ஸ்டாண்டேர்ட்" "சுதேசமித்திரன்" "வைதீக தர்மவர்த்தனி" போன்ற பத்திரிகைகளில் மிக சிறப்பாக விமர்சனம் செய்யப்பட்டிருந்தன. அதைக் கண்ணுற்ற பல ஆஸ்திகர்கள் டெல்லி, கல்கத்தா, பம்பாய், பங்களூர் போன்ற இடங்களிலிருந்து தங்களுக்கு பிரதி ஒன்று அனுப்புமாறு வேண்டினார்கள். ஆனல் அவர்கள் எல்லோருக்கும் அனுப்பும் அளவில் பிரதிகள் எங்கள் கைவசமில்லாததால் பெரும்பான்மையோர் ஏமாந்த மடைய நேர்ந்தது.

இந்த வெளியீடு தயார் செய்ய விளம்பரம் மூலம் கிட்டும் பணத்தை கொண்டே சமாளிக்க வேண்டியிருப்பதால் இம்முறை அதிக அளவு பிரதிகள் அச்சடித்து இக்குறையை ஓர் அளவு நீக்க விளம்பரங்கள் பெரும் அளவு கிட்ட முயற்சி செய்தோம். ஆனல் அம் முயற்சி போதிய அளவு பயனளிக்காததால் நாங்கள் உத்தேசித்த அளவு பிரதிகள் அச்சடிக்கக் கூடவில்லை.

ஆயினும் ஓர் அளவு திருப்திகரமான விளம்பரங்கள் சேகரிப்பதில் ஸ்ரீ P. P. சந்திரசேகரன், ஸ்ரீ V. ஸ்ரீநிவாஸ ஐயர், ஸ்ரீ M V. சேஷகிரி, ஸ்ரீ R. மீனாக்ஷி ஸுந்தரம், ஸ்ரீ S. வைத்தியனாத ஐயர், ஸ்ரீ ராஜகோபாலன் போன்ற அன்பர்கள் அரும் பாடுபட்டு வெற்றி பெற்றார்கள். அவர்கள் பணி மிகவும் போற்றத் தக்கதாகும்.

தன் உத்தியோகத் துறையில் உள்ள பல சிரமங்களையும் உடல் நலம் சற்று குறைவடைந்ததையும் பொருட்படுத்தாது அல்லும் பகலும் இவ் வெளியீடு உருவாக்குவதில் பெரும் அளவு உழைத்து நற்பணி புரிந்த நண்பர் ஸ்ரீ S. V. நாராயணன் அவர்களின் அரும்பணி ஒப்பு உவமையற்றது என்று கூறிடின் மிகையாகாது.

குறுகிய காலத்தில் சிறந்த முறையில் இவ் வெளியீட்டை அச்சடித்துத் தயார் செய்த குரு பிரிண்டர்ஸ், அச்சகத்தாரின் பேருதவி சாலச் சிறந்ததாகும். அவர்களை அறிமுகப்படுத்திய ஸ்ரீ M. C. ஸுப்ரமணியம் அவர்களின் உதவி போற்றத்தக்கது.

இவ் வெளியீடு பிரசுரிக்க ஆதாரமாக இருக்கும் "விளம்பரம்" கொடுத்து உதவிய ஆஸ்திக அன்பர்கள் அனைவருக்கும்; ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபர்கள் படங்களையும் ஜகத்குரு ஸ்ரீ ச்ருங்கேரி பெரியவாள் ஸ்ரீ முகத்தை ஸம்ஸ்க்ருத லிபியில் அச்சடித்து ப்ரதிகளை கொடுத்து உதவிசெய்த M/s B. G. பால் அண்டு கம்பெனி மானேஜர் ஸ்ரீ நீலகண்ட ஐயர் அவர்களுக்கும், ஸ்ரீ சிருங்கேரி பெரியவாள் ப்ளாக் கொடுத்து உதவிய ஓர் நண்பருக்கும் எங்கள் மனமார்ந்த நன்றியை தெரிவித்து கொள்கிறோம்.

சரப உருவ படம் ஒன்றை ப்ளாக் செய்ய French Institute of Indology, Pondicherry, Dr. S. பரமசிவம் மூலம் கொடுத்து உதவியதற்கு எங்கள் நன்றி உரியதாகும்.

மேலும் இப்பணியில் ஈடுபட்ட ஆஸ்திக அன்பர்களுக்கு நீண்ட ஆயுளும் நிறைவான செல்வமும் ஈயுமாறு இறைவனை வேண்டுகிறோம்.

ஸர்வேஜனா: ஸுகினோபவந்து.

# Sri Poornanandanatha Sri Vidya Peetam,

59, Thambu Chetty Street, Madras-1.

## Sri Sarada Navarathri Celebrations

*1967*



**Standing :—**

Sri V. S. Angappan
Dr. S Paramasivam
Sri M V. Pattabirama Iyer
Sri K. R. Manickam
Sri S. V. Narayana Iyer
Sri P. P. Chandrasekharan

**Chair :—**

Sri Poornanandanatha (*Adyaksha of the Peetam*)

**Sitting :—**

Sri V. Srinivasa Iyer, Sri C. Guruswamy, Sri S. Vaidyanatha Iy

(SOUVENIR COMMITTEE)

# 1968-ஸு பூஜா மஹோத்ஸவ கார்யக்ரமங்களின் விவரங்கள்

1-1-68 வியாழக்கிழமை காலை வைகுண்ட ஏகாதசி, ஸ்ரீ லக்ஷ்மீ நாராயண பூஜை
3-1-68 சனிக்கிழமை இரவு ஆருத்ரா, நடராஜர் அபிஷேகம்
15-1-68 திங்கட்கிழமை இரவு பௌர்ணமி, தேவீ பூஜை
23-1-68 செவ்வாய்க்கிழமை இரவு விசாக, கணபதி, சுப்ரமண்ய பூஜை
30-1-68 செவ்வாய்க்கிழமை மாலை முதல்
13-2-68 ,, ,, வரையில் } மாக ராஜச்யாமளா நவராத்ரி
20-2-68 ,, ,, விசாக, கணபதி, சுப்ரமண்ய பூஜை
26-2-68 திங்கட்கிழமை இரவு மஹா சிவராத்ரி, 108 சிவலிங்கங்களுக்கு 108 சங்காபிஷேகம்
14-3-68 வியாழக்கிழமை ,, பௌர்ணமி தேவீ பூஜை
18-3-68 திங்கட்கிழமை ,, விசாக, கணபதி சுப்ரமண்ய பூஜை
29-3-68 வெள்ளிக்கிழமை ,, முதல்
12-4-68 ,, ,, வரையில் } வஸந்த நவராத்ரி மஹோத்ஸவம்
14-4-68 ஞாயிற்றுக்கிழமை காலை ருத்ராபிஷேக, மஹன்யாஸ ஹோமங்கள் சமாராதனை
15-4-68 திங்கட்கிழமை இரவு விசாக கணபதி, சுப்ரமண்ய பூஜை
13-4-68 சனிக்கிழமை மாலை வருஷப் பிறப்பு நூதன பஞ்சாங்க ச்ரவணம் பானக பூஜை
12-5-68 ஞாயிற்றுக்கிழமை மாலை பௌர்ணமி தேவீ பூஜை-விசாக, கணபதி சுப்ரமண்ய பூஜை
8-6-68 சனிக்கிழமை மாலை விசாக, கணபதி சுப்ரமண்ய பூஜை
10-6-68 திங்கட்கிழமை மாலை பௌர்ணமி தேவீ பூஜை
26-6-68 புதன்கிழமை மாலை முதல்
9-7-68 செவ்வாய்க்கிழமை மாலை வரையில் } ஆஷாட மஹாவாராஹி நவராத்திரி மஹோத்ஸபம்
6-7-68 வெள்ளிக்கிழமை மாலை விசாக, கணபதி சுப்ரமண்ய பூஜை
2-8-68 செவ்வாய்க்கிழமை இரவு விசாக, கணபதி சுப்ரமண்ய பூஜை
7-8-68 புதன்கிழமை இரவு பௌர்ணமி தேவீ பூஜை
29-8-68 வியாழக்கிழமை இரவு விசாக, கணபதி சுப்ரமண்ய பூஜை
6-9-68 வெள்ளிக்கிழமை இரவு பௌர்ணமி தேவீ பூஜை
23-9-68 திங்கட்கிழமை இரவு முதல்
5-10-68 சனிக்கிழமை இரவு வரையில் } ஆச்வீக, சாரதா நவராத்ரி மஹோத்ஸவம்
6-10-68 ஞாயிற்றுக்கிழமை காலை ருத்ராபிஷேக, மஹன்யாஸ ஹோமஸமாராதனை
23-10-68 புதன்கிழமை இரவு விசாக கணபதி சுப்ரமண்ய பூஜை
4-11-68 திங்கட்கிழமை இரவு பௌர்ணமி தேவீ பூஜை
19-11-68 செவ்வாய்க்கிழமை இரவு விசாக கணபதி சுப்ரமண்ய பூஜை
18-11-68 திங்கட்கிழமை இரவு கிர்த்திகா, ஸோமவார, ஸோமாஸ்கந்தர் அபிஷேக பூஜை
25-11-68 ,, ,, ,, ,,
2-12-68 ,, ,, ,, ,,
9-12-68 ,, ,, ,, ,,
17-12-68 செவ்வாய்க்கிழமை இரவு விசாக கணபதி சுப்ரமண்ய பூஜை
30-12-68 திங்கட்கிழமை காலை வைகுண்ட ஏகாதசி ஸ்ரீ லக்ஷ்மீ நாராயண பூஜை

(ராதா கல்யாண மஹோத்ஸவ தேதிகள் பின்பு அறிவிக்கப்படும்)